also add that as far as Secretariat Officers are concerned, the general criterion followed even in selection, is merit and ability to work in any department.

SRI A. GOVINDASAMY : ரெவின்யூ க்வாலிபிகேஷன் உள்ள வர்கள் வேறு இலாகாவில் இருக்கிற விஷயம் அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அவர்களுக்கு எல்லாம் ரெவின்யூ இலாகாவில் வேலை தருவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ரெவின்யூ இலாகாவிற்கு எத்தனை ஆட்கள் தேவைப்படுகிறார்களோ அத்தனைப்பேர்களைத்தான் அங்கே அனுமதிக்கவேண்டியிருக்கிறது. ரெவினியூ தகுதி பெற்றவர்கள் எல்லோரையும் அந்த இலாகாவில் போட வேண்டும் என்பது முடியாத காரியம்.

*Cattle farm at Korrukkai*

* 653 *Q*.—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state with reference to the answer furnished for question No. 526 on 2nd April 1958—

(*a*) whether the scheme for starting a Cattle Farm at Korrukkai, Tiruthuraipoondi taluk, has been examined; and

(*b*) if so, when it will be taken up for execution?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The proposal is being examined.

(*b*) With a view to establish a Cattle Farm at Korrukkai necessary particulars about the lands to be acquired for the Farm have been called for from the Collector of Tanjore.

SRI A. VEDARATHNAM : அந்த இடத்தில் ஏராளமாகப் புறம் போக்கு நிலங்கள் இருக்கின்றன. சில மிராசுதார்கள் தனக்குச் சொந்த மான நிலங்களைக்கூட இனாமாகக் கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். முன்பு சர்வே செய்த பிரகாரம் அங்கே உம்பளச்சேரி கால்நடை வளர்ப்புப் பண்ணையை விரைவில் அமைக்க முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கே ஒரு பண்ணையை ஆரம்பிக்கவேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். அங்கே யுள்ள புறம்போக்கு நிலங்களை இலவசமாகக் கொடுக்க முன் வருவதாக இருந்தால் அதைப்பற்றி ஒன்றும் கஷ்டம் இருக்காது. குறைந்த செலவில் பண்ணையை ஆரம்பித்துவிடலாம்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, உம்பளச்சேரி இனத்தைச் சேர்ந்த வண்டி மாடுகளாக இருந்தாலும், கறவை மாடுகளாக இருந்தாலும் நல்ல முறையில் உபயோகப்படுகிறது என்று சொல்கிற காரணத்தினால் அதைப்பற்றி ஆராயப்பட்டதா ? உம்பளச்சேரி மாட்டுப் பண்ணையை ஆரம்பிக்கப் போவதாக கடந்த ஒரு ஆண்டு காலமாகச் சொல்லப்பட்டு வந்திருந்தும்கூட—கடந்த ஒரு ஆண்டு காலத்திற்கு முன் பாகவே விண்ணப்பம் அனுப்பியிருக்கிறார்கள் என்பது தெரியுமா ? என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒரு ஆண்டுக்கு முன்பே ஒரத்த நாட்டில் ஒரு பண்ணை ஆரம்பிக்கப்பட்டு நல்ல பலன் அளித்து வருகிறது என்று கனம் அங்கத்தினருக்குச் சொல்ல விரும்புகிறேன்.